ஓம் சிவாயநம

உ

முருகா

ஓம் சிவாயநம

# பிரதோஷ பெருமை

திருமுருக கிருபானந்த வாரியார்
சுவாமிகள் அருளியது



இந்நூலை ஓதி இகபர நலன் அடைந்து உய்க

இங்ஙனம்
பிரதோஷ கால சித்தர்
தெய்வ ஷண்முகம்
கண்டாச்சிபுரம்-605 701

ஓம் சிவாயநம

உ

முருகா

சகல சௌபாக்கியம் தரும்

# பிரதோஷப் பெருமை

## விநாயகர் துதி

ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலுமெயிற்றனை
நந்தி மகன் தனை ஞானக்கொழுந்தினை
புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே.

## ஆலயத்தியத்திற்குச் செல்லும்போது பட்டுடுத்திச் செல்லுவது பெரிய புண்ணியமாகும்

## முன்னுரை

இறை வழிபாடு குறைகளை நீக்கி நிறைவு தரும் புண்ணிய நாட்களில் வழிபடுவது பெரும் பயன்தரும்.

நவமதால் தவருவகை வரும் பிரதோடம்
தன்னில் அர்ச்சனை
புரி பலன் காற்ற வல்லவர் யார்?
சிவ பிரானையே சரண் என ருவரும்
செயலால் ஏற்றவர்

மால் அயன் பூசிக்கும் கோத்தினர் ஆவர்
உவமை சேர் பிரதோடத்தில் பூசனையாற்றி
நற் பிரசாதம்
அன்பர்களோடு பயின் ேறே.
(சிவரகசியம்)

ஆலயத்தில் பல பெரியவர்களும், சித்தர் களும் வந்து வழிபடுவார்கள். ஆகவே ஆல்யம் செல்வது நலம்.

இங்ஙனம்,
**தெய்வ ஷண்முகம்**
பிரதோஷ காலசித்தர்
**கண்டாச்சிபுரம் P. O.**
விழுப்புரம் ஆர். எஸ்.

உ.
முருகா

# பிரதோஷப் பெருமை

காலத்துக்கு அதிக வலிமையுண்டு. காலமறிந்து ஒரு கருமம் செய்தால் ஞால முழுவதும் நமது வசமாகும்.

ஞாலம் கருதினும் கைகூடும்—காலம்
கருதி இடத்தாற் செயின்

என்று திருவள்ளுவ தேவர் கூறுகின்றார். ''காலம் அறிதல்'' என்ற அதிகாரத்தையே அமைத்தார்.

காலத்தில் செய்வதற்கு அதிக பயன் ''பாலோடாயினும் காலமறிந்து உண்'', என்பது ஒரு பழமொழி.

இறைவனை எப்போதும் வழிபட வேண்டும். ஆனால் புண்ணிய தினங்களில் வழிபட்டால், ஜெபம் செய்தால் ஒன்றுக்குக் கோடி மடங்கு மிகுதியான உயர்ந்த பயன்

விளையும். சோமவாரம், சிவராத்திரி, தைப்பூசம், பங்குனி உத்திரம், கந்தர்சஷ்டி, வைகுண்ட ஏகாதசி, சூரிய சந்திரகிரகண காலங்கள், திருவாதிரை முதலிய புண்ணிய நாட்களில் அன்புடன் வழிபாடு புரிவார்கள் பாவங்களினின்றும் நீங்கி புண்ணியம் பெற்று இகம், பரம், வீடு என்ற மும்மை நலன்களையும் எளிதில் பெறுவார்கள்.

விரத நாட்களில் உண்ணாது நோன்பிருந்து ஆலய வழிபாடு செய்து திருமுறைகளை ஓதி திருவைந்தெழுத்தைத் செபிக்க வேண்டும்.

1. ஆலய வழிபாடு—உடல் நலமும்
2. திருமுறைகளை ஓதுவது—வாக்கு நலமும்
3. பஞ்சாட்சர ஜெபம்—மனநலமும்

தந்து நம்மைக் காக்கும். வினைகள் விலகும். அருளாற்றல் உண்டாகும். மார்க்கண்டேயர் சிவ வழிபாடு செய்து மறலியை வென்று வீடு பேறு பெற்றார்.

அத்தன் ஆலயம் அனைத்தும் வைகலும்
பக்தியோடு முன் பரவியே மிகும்
சுத்தனாகிய தொலைவில் ஆருயிர்
முக்தி எய்தினான் முழுதுணர்ந்துள்ளோன்

கந்தபுராணம்

# பிரதோஷ வரலாறு

தேவர்களும், அசுரர்களும் ஒருவரை ஒருவர் பகைத்துப் போர் புரிவார்கள். தேவர்கள் நரை, திரை, மூப்பு, மரணம் என்ற துன்பங்கள் இன்றி வாழ விரும்பினார்கள். இவை அணுகாது வாழ வேண்டுமாயின சிவ மூர்த்தியை வேண்டினால் இறைவன் ஒரு சொல்லால் இவற்றை அருளுவான்.

'' நீகு ஒக மாட-நாகு ஒக மூட'' என்பார் தியாகப் பிரமம். இந்த சுருக்கமான நெறியை அறியாத தேவர்கள் பிரமதேவனிடம் சென்று தங்கள் கருத்தை அறிவித்தார்கள். திருமாலிடம் சென்று ''சாவா மூவா நலம்பெற என்ன வழி'' என்று வினவினார்கள். திருமால் திருபாற் கடலைக் கடைந்து அமிர்தம் உண்டால் மரணமின்றி சந்தமும் இளமை யுடன் வாழலாம்' என்று ஆலோசனை கூறினார்கள்.

இந்திராதி தேவர்கள், திருப்பாற்கடலை யடைந்து பாற்கடலைக் கடைய முயன்றார்கள். மந்தரகிரியை மத்தாகவும், சந்திரனை தறி யாகவும் வாசுகி என்ற நாகராஜனை தாம்புக் கயிறாகவும் அமைத்தார்கள். திருமால் கூர்மமாகி மந்தரகிரியைத் தனது முதுகில்

தாங்கினர். அசுரர்கள் தலைப்புறமும் தேவர்கள் வால்புறமும் நின்று கடையலானார்கள்.

அந்த நாள் தசமி திதி, அன்று ஒரு வேளை உண்டு திருப்பாற் கடலைக் கடைந்தார்கள். மறுநாள் ஏகாதசி பதினோராவது திதி.

பாற்கடலைக் கடைந்தபோது வாசுகி வருத்தந் தாங்காது பதைபதைத்து நஞ்சை உமிழ்ந்தது. கடலில் இருந்தும் நஞ்சு தோன்றியது. வாசுகி கக்கிய ஆலமும் கடலில் தோன்றிய ஆலமும் ஒன்றுசேர்ந்து ஆலாலம் எனப் பெயர் பெற்றது.

இந்த ஆலாலம் மிக்க பயங்கரமான வெப்பமுடன் உலகத்துக்கே முடிவு செய்வது போல் விண்ணவரை விரட்டியது வலமாகவும், இடமாகவும் மறித்துத் துரத்தியது. திசைதோறும் தேவர்கள் நடுங்கி ஒடுங்கி ஓடினார்கள்.

வெண்ணிறமாக இருந்த விஷ்ணுமூர்த்தி விஷ வேகத்தால் நீல நிறம் ஆனார்.

வானவர்கள் அஞ்சி திருக் கயிலாயஞ் சென்று அரனாரிடம் அடைக்கலம் புகுந்தார்கள்.

தஞ்சம் புகுந்த வானவர்கள் "தேவ தேவ! மகா தேவ! அருட்பெருங் கடலே! கருணைக் குன்றே! தேவரீர் ஆண்டான் நாங்கள் அடிமைகள் தேவரீர் உடையவர் நாங்கள் உடமைகள் நாங்கள் பாற்கடல் கடைந்தோம். அந்த விவசாயத்தில் முதலில் விளைந்தது தேவரீருக்கு உரியது என்று கூறி முறையிட்டார்கள்

கருணையே வடிவாய கண்ணுதற் கடவுள் தமது அருகில் திருநீற்றுக் கோயிலைத் தாங்கி நிற்கும் சுந்தரரைப் பார்த்து "சுந்தரா அவ் விடத்தை இவ்விடத்துக்கு கொணர்வாய்" என்று பணித்தருளினார்.

சுந்தரர் மாலயனாதி வானவர்களால் அணுக முடியாத அதிபயங்கரமான கொடிய விஷத்தை நாவல் பழம் போலத் திரட்டி உருட்டி கொணர்ந்து சிவ்பெருமானிடம் தந்தார்.

அக்கொடிய விஷத்தை அடியவர்களாய அமரர்கள் உய்ய, அமுதம்போல் உண்டருளி னார்கள். அந்த விஷம் உள்ளே சென்றால்

அவன் சிரம் ஐந்துங் கண்டேன்
இவ்வேளை இருகண் கண்டேன்
கொடுத்ததை வாங்கக் கண்டேன்
—ஜாம்புவந்தர்

இந்தக் கருத்தை வலியுறுத்தும் வடமொழிப் பால் ஒன்று காண்க.

இந்த்ரம் த்வயக்ஷம் அமந்த
பூர்வ முதிதம் பஞ்சானனம் பத்மஜம்
வார்திம்சுத்த ஜலம் சிவம் சித களம்
லட்சுமீபதிம் பிங்களம்
சைலான் பக்ஷ தரான ஹயான பிததா
காமஞ்ச சத்விக்ரகம்
சர்வம் த்ருஷ்டம் இதம்மயா ரகுபதே
தத்தாபஹாரம் விநா

இவ்வாறு தேவர்கள் பொருட்டு சிவ பெருமான் ஆலால விஷத்தை உண்டருளியது ஏகாதசி மாலை நேரமாகும்.

## மீண்டும் பாற்கடல் கடைந்தது

சிவபெருமான் தேவர்களை நோக்கி மீண்டும்சென்று திருப்பாற்கடலை கடையுமாறு

பணித்தருளினார். அமரர்களும், அசுரர்களும் மீண்டும் கடலருகில் சென்று நின்று முன்போலவே திருப்பாற்கடலைக் கடையத் தொடங்கினார்கள்.

பாற்கடலிலிருந்து இலக்குமி, ஐராவதம் காமதேனு, கற்பகதரு, சிந்தாமணி, கௌஸ்துபமணி, சூடாமணி, உச்சைச்ரவம் முதலியன ஒவ்வொன்றாகத் தோன்றின. இலக்குமியைத் திருமால் ஏற்றுக் கொண்டார் ஏனைய பொருள்களை இந்திராதி தேவர்கள் அடைந்தார்கள்.

ஏகாதசியாகிய அன்று இரவு முழுவதும் உறக்கம் இன்றிப் பாற்கடலைக் கடைந்தார்கள் மறுநாள் துவாதசி அன்று அதிகாலையில் அமிர்தம் தோன்றியது. அதனை அவர்கள் பகிர்ந்து உண்டார்கள். அமிர்தம் உண்ட அமரர்கள் அந்த மகிழ்ச்சியினால் துவாதசி அன்று ஆடியும் பாடியும் பொழுதைப் போக்கினார்கள்.

## பிரதோஷம்

மறுநாள் திரயோதசி 13 (பதிமூன்று)-ம் நாள் தேவர்கள் சிவபெருமானை முன்னே

வணங்காது பொழுது போக்கிய தங்கள் குற்றத்தை உணர்ந்து சிவ பெருமானிடம் சென்று பணிந்து தங்கள் குற்றத்தை மன்னித்து அருளுமாறு வேண்டினார்கள்.

பரம கருணாநிதியாகிய சிவபெருமான் மகிழ்ந்து தேவர்களுக்கு அருள் புரியத்திருவுளம் கொண்டு கயிலையில் அன்று மாலை 4-30 மணி முதல் 7.30 மணி வரை பிரதோஷ வேளையில் தம்திருமுன் இருந்த ரிஷப தேவரின் இரு கொம்புகளுக்கிடையில் நின்று அம்பிகை காண திருநடம் செய்தருளினார். தேவர்கள் அதனை தெரிசித்து சிவபெருமானை துதி செய்து வணங்கினார்கள். அதுமுதல் திரயோதசி திதியன்று மாலைநேரம் பிரதோஷ காலம் என்று வழங்கலாயிற்று. பிரதோசம் ரஜனி முக வேளை (பாபத்தைப் போக்கும் நேரம்).

இது சிவமூர்த்திக்கு உரிய பலவித விரதங்களில் தலையாயது. இவ்விரதத்தை அனுஷ்டிப்போர் துன்பங்களில் நின்றும் நீங்கி இன்பத்தை எய்துவர்.

## விரதம் அனுஷ்டிக்கும் முறை

வளர்பிறை, தேய்பிறை என்ற இரண்டு பட்சங்களிலும் வரும் திரயோதசி திதியன்று அதிகாலையில் எழுந்து நீராடி நித்திய கடன்களை முடிக்கவேண்டும். சிவாலயம் சென்று வழிபட வேண்டும். அன்று முழுவதும் உணவின்றி உபவாசமாக இருக்கவேண்டும். திருமுறைகளை ஓதவேண்டும். பிரதோஷ நேரம் மாலை 4-30 முதல் 7-30 மணிவரை. அந்த நேரத்தில் சிவாலயம் சென்று உள்ளம் உருகி ஐந்தெழுத்தை ஓதி வழிபடவேண்டும். வசதியுள்ளவர்கள் சுவாமிக்கும் அம்பிகைக்கும் அபிஷேக ஆராதனைகள் செய்விக்கவேண்டும்.

தேவியுடன் கூடிய சந்திரசேகரர் இடப வாகனத்தில் ஆலயத்தை மூன்றுமுறை வலம் வருவதை சேவித்து வணங்க வேண்டும். முதல் சுற்றில் வேத பாராயணமும், இரண்டாவது சுற்றில் திருமுறை பாராயணமும், மூன்றாவது சுற்றில் நாதஸ்வர இன்னிசையும் நடைபெற வேண்டும்.

சுவாமி திருமுன் இருக்கும் இடபதேவருக்கு அருகம்புல் மாலையும், சிவப்பு அரிசி நிவேதனமும், நெய் விளக்கும் வைத்து வழிபடவேண்டும்.

பிரதோஷ வேளையில் சிவலிங்க மூர்த்தத்தை இடப தேவரின் இரு கொம்பு

களுக்கிடையே கண்டு வணங்க வேண்டும். ஐந்தெழுத்தை ஜபம் செய்ய வேண்டும்..

## சோம சூக்தப் பிரதட்சிணம்

மற்றை நாட்களில் ஆலயத்தில் மூன்று முறை வலம் வரும் வழக்கத்திற்கு மாறாக சோம சூக்தப் பிரதட்சிணம் செய்யவேண்டும்.

ஆலகால விஷம் தேவர்களை முன்னும் பின்னும் வலமும் இடமுமாகத் துரத்தியது. தேவர்கள் அஞ்சி நடுங்கி ஒடுங்கி கயிலை மலைக்கு ஓடினார்கள். இறைவனை வலமாக வந்து உள்ளே சென்று பரமனைச் சரணடைய லாம் என எண்ணிய அவர்களை ஆலகால விஷம் அப்பிரதட்சிணமாக சென்று எதிர்த்தது. இதை கண்டு அஞ்சிய தேவர்கள் வந்த வழியே திரும்பிவர ஆலகால விஷம் அந்தப் பக்கத்திலும் எதிர்த்துச் சென்று பயமுறுத்தியது. இவ்வாறு தேவர்கள் வலமும் இடமுமாக வந்த அந்த நிகழ்ச்சிதான் சோம சூக்தப் பிரதட்சிணம் எனப் பெயர் பெற்றது.

## பிரதட்சிண முறை

முதலில் சிவலிங்கத்தையும், ரிஷப தேவரையும் வணங்கிக்கொண்டு அப்பிரதட்சிணமாக சண்டேசுவரர் சந்நிதிவரை சென்று அவரை வணங்கிக்கொண்டு அப்படியே திரும்பிவந்து

முன்போல் சிவலிங்கத்தையும் ரிஷப தேவரையும் வணங்கிக்கொண்டு வழக்கம்போல் பிரதட்சிணமாக ஆலயத்தை வலம் வரும்போது சுவாமி அபிஷேச தீர்த்தம் விழும் நிர்மாலியத் தொட்டியை கடக்காமல் அப்படியே வந்த வழியே திரும்பி அப்பிரதட்சிணமாக சந்நிதிக்கு வந்து சிவலிங்கத்தையும், ரிஷப தேவரையும் வணங்கவேண்டும். இவ்வாறு மூன்றுமுறை செய்யவேண்டும். இவ்வாறு செய்தால் அநேக அசுவமேத யாகம் செய்த பலன் கிடைக்குமென்று நூல்கள் கூறுகின்றன.

இவ்வாறு ஆலயத்தில் பிரதோஷ வழிபாடு முடிந்தபின் வீட்டிற்குச் சென்று உணவருந்துதல் வேண்டும்.

## சனிக்கிழமை வரும் பிரதோஷம் மிகச் சிறந்ததாகும்

## சுலோகம்

வருஷம் சண்டம் வ்ருஷம் சைவ
ஸோம ஸூத்ரம் புனர் வ்ருஷம்
சண்டஞ்ச ஸோம ஸூத்ரஞ்ச
புனச் சண்டம் புனர்வ்ருஷம்

பிரதோஷ வழிபாடு செய்ய மாலயனாதி யானவர் சிவாலயம் செல்வார்கள். ஆதலால் பிரதோஷ நேரத்தில் திருமால் கோயில்களில் வழிபாடு செய்வதில்லை.

ஒவ்வொரு நாளும் மாலை 4-30 முதல் 7-30 மணி வரை பிரதோஷ நேரமாகும். தினப் பிரதோஷம் எனப்படும்.

## பிரதோஷ மகிமை

1) காலைப் பொழுதிலும், உச்சிப் பொழுதிலும், மாலைப் பொழுதிலும் பரமசிவனை இடைவிடாமல் தரிசனம் செய்தால் முறையே மேலாகிய சுவர்க்க போகமும் அஸ்வமேத யாக பயனும் பாவ விமோசனமாகிய மிகுந்த நன்மை பொருந்திய பலன்கள் உண்டாகும். அன்றியும் பரமசிவனை பிரதோஷ காலத்தில் ஆச்சாரமாய் வணங்கினால் திரிகாலத்திலும் தரிசனம் செய்த பலனுண்டாகும்.

2) பிரதோஷ காலத்தில் பரமசிவனுடைய திருமேனியைக் கண்டு மிகுந்த அன்பாக தரிசனம் செய்தவர்களுடைய பாதங்கள் ஆகாய அளவு அடைத்து வைத்துள்ள பஞ்சில் தீப்பொறி பட்டது ஒக்கும். பிரதோஷ

காலமாவது எல்லா பான்மையும் உடைய த்ரயோதசி திதி தினத்தில் ஸூரிய அஸ்தமன மாகும்முன் 3 3/4 நாழிகையும் அஸ்தமன மான பின் 3 3/4 நாழிகையும் அதாவது 4-30 முதல் 7-30 மணி வரை பிரதோஷ கால மாகும்.

3) பிரதோஷ காலத்தில் நெய், தயிர், பால், தேன், நல்லெண்ணெய், சந்தனம், பரிசுத்த மாகிய பழங்கள் இளநீர் ஆகிய இவைகளால் பரமசிவனை அபிஷேகம் செய்யும்போது இடை இடையே நடைபெறும் தீப ஆராதனையும் கண்டு தெரிசிக்க வேண்டும். திருமஞ்சனம் முதலியவற்றால் அபிஷேகம் செய்தால் 100 மடங்கு அதிக பலன் தரும். அங்ஙனம் செய்பவன் மூடனாலும் சாரூப பதவி அடைவான்.

4) ஒரு தரம் பிரதட்சிணம் செய்தால் அவமிருத்துவம் நீங்கும். மூன்று தரம் பிர தட்சணம் செய்தால் கொடுமையான வியாதி கள் நீங்கும். ஐந்து தரம் பிரதட்சணம் செய் தால் சந்தானம் முதலாகிய சம்பத்துக்கள் உண்டாகும். நூறுதரம் பிரதட்சணம் செய் தால் பிரமஹத்தி மகாபாதகம் நீங்கும். ஆயிரம் தரம் செய்தால் தேவேந்திரனாவான். ஒப்பற்ற, இடமும் வலமுமாக பிரதட்சிணம் செய்தால் ஒரு கோடி பிரதட்சிண பலனுண்

டாகும். அதிகார நந்தியை ஒரு முறை சுற்றி னல் ஒரு கோடி சுற்றிய பலன் உண்டு.

### அதிகார நந்தி வணக்கம்

வந்துஇறை அடியில் தாழும் வானவர் மகுடம் கோடி
பந்தியின் மணிகள் சிந்த வேத்திரப் படையால் தாக்கி
அந்தியும் பகலும் தொண்டர் அலகிடும் குப்பை யாக்கும்
நந்தியெம் பெருமான் பாத நகைமலர் முடிமேல் வைப்பாம்.

—திருவிளையாடல் புராணம்

5) கற்ப கிரகத்தை சூழ்ந்த உள் மதிலை ஒரு தரம் பிரதட்சிணம் செய்தால் அக்கற்ப கிரகத்தை கோடி பிரதட்சிணம் செய்ததாகும். மூன்றும் பிரகாரமாகிய புறமதிலை ஒரு தரம் பிரதட்சணம் செய்தால் அக்கற்ப கிரகத்தை பத்து கோடி பிரதட்சிணம் செய்ததாகும். சரீரத்தில் மண்பட வீழ்ந்து வணங்கி தண்டப் பிரதட்சணம் செய்தால் அதனினும் பத்து கோடி அதிகமான பலன் உண்டாகும். அங்ஙனம் செய்பவன் ஒப்பற்ற மூடனானாலும் உயர்ந்த சிவபுரம் அவனது காணியாகும்.

# பிரதோஷ வழிபாட்டின் மகிமை

சிவபெருமான் பிரதோஷ காலத்தில் இடப தேவரின் இரு கொம்புகளுக்கிடையே உயிர்கள் உய்யும்பொருட்டு திருநடம் புரிந்தார். அப்போது சரஸ்வதி வீணை வாசித்தாள். இந்திரன் புல்லாங்குழல் ஊதினான். பிரமதேவர் தாளம் போட்டார். இலட்சுமி தேவி பாடினாள்; திருமால் மிருதங்கம் வாசித்தார்; தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள், திசைபாலர்கள் முதலிய அனைவரும் வந்து பிரதோஷ காலத்தில் இறைவனை வழிபடுகிறார்கள்.

இயக்கர் கின்னரர் யமனொடு வருணர்
இயங்கு தீவளி ஞாயிறு திங்கள்
மயக்கமில் புலி வானரா நாகம்
வசுக்கள் வானவர் தானவரெல்லாம்
அயர்ப் பொன்றின்றி நின் திருவடியினை
யர்ச்சித்தாற் பெரு மாரருள் கண்டு
திகைப் பொன்றின்றி நின் திருவடி யடைந்த
செழும் பொழில் திருப்புன் கூருளானே.

—சுந்தரர்.

தேவர்கள் பிரதோஷ வழிபாடு செய்வதோடன்றி அவ்வழிபாட்டிற்கு தாங்களே முன் வந்து உதவுகிறார்கள் என்பதை பிரமோத்தர காண்டம் தெரிவிக்கிறது.

"வரத்தின் அருள்பெற்ற மத்தளமாயோன் தன்
கரத்தினனி பொத்திக் களிப்ப—நரைத்தலையோன்
தாளம் பிடிக்க"

—கச்சி ஆனந்த ருத்ரேசர் வண்டு விடு தூது

உஜ்ஜயினி மாநகருக்கு அரசன் சந்திரசேனன். சிவ வழிபாட்டில் சிறந்தவன். சனிப் பிரதோஷ வழிபாடு செய்து எல்லாப் பேறுகளையும் பெற்று புகழுடன் விளங்கிவந்தான்.

இந்த அரசன் செய்யும் வழிபாட்டை கண்ணுற்ற ஒரு சிறுவன் வீதியிலே மணலால் ஒரு சிவாலயம் அமைத்து ஒரு சிலையை சிவலிங்கமாக பாவித்து வழிபாடு செய்து பெரும் பேறு பெற்றான். சந்திரசேனனும் இறுதியில் சிவகதி பெற்றான்.

பிரதோஷ வழிபாடு செய்தால் வறுமை, பயம், பாவம், மரண வேதனை இவை யெல்லாம் ஒழிந்துவிடும். நலம் பல விளையும்.

"இரண நல்குர விரும்பவ மிரும்பசி புரோகம்
அரனுறும் பயங் கிலேசங் கேதமவ மிகுத்து
மரண வேதனை யிவையெலா மகற்றெல
வணங்
புரண நாதனை பிரதோடத்திற் போற்றிடத்
லாதகுமால்

—கடம்பவன புராணம்

பிரதோஷ காலத்தில் அடியிற் கண்ட தேவாரங்களை ஓதுக.

"நாகந்தான் கயிறாக நளிர்வரையதற்கு
மத்தாகப்
பாகந்தேவ ரொடுசுடரர் படுகடலல
றெழக் கடைய
வேகநஞ்செழ வாங்கே வெருவொடு
கிரிந்தெங்குமோட
ஆகந்தன்னில் வைத்தமிர்தமாக்குவித்தான்
மறைகாடே

—திருஞானசம்பந்தர்.

பருவரை ஒன்று சுற்றி அறவங்கை விட்ட
இமையோ ரிரிந்து பயமாய்த்
திருநெடுமால் நிறத்தை அடுவான் விசும்பு
சுடுவானெழுந்து விசை போய்ப்

பெருகிட மற்றிதற்கோர் பிதிகார
மொன்ற
அருளாய் பிரானே எனலும்
அருள் கொடு மாவிடத்தை எரியாமலுண்ட
அவனண்ட ரண்டர் அரசே.

—திருநாவுக்கரசு நாயனார்.

கோல்வரை மத்தென நாட்டித்
கோளரவு சுற்றிக் கடைந்தெழுந்த
ஆல நஞ்சுண்டவர் மிக விரிய
அமரர்கட்கருள் புரிந்து கருதி
நீலமார் கடல் விடந்தனை யுண்டு
கண்டத்தே வைத்த பித்த நீ செய்த
சீலங் கண்டு நின் திருவடி அடைந்தேன்
செழும் பொழில் திருப்புன் கூருளானே.

—சுந்தரர்.

கோலாலமாகிக் குகைடல் வாயன் றெழுந்த
கோலால மாகிக் குரைகடல் வாயன் றெழுந்த
ஆலால முண்ட வஞ்சதுர்தா னென்னேடி
ஆலால முண்டிலனேல் அயன்மா லுள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவகான் சாழலோ

—மாணிக்கவாசகர்.

இனியோ நாமுய்ந்தோம் இறைவன் தாள்
சேர்ந்தோம்
இனியோ ரிடரெல்லாம் நெஞ்சே—இனியோர்
வினைக்கடலை யாக்குவிக்கு மீளாப்பிறவிக்
கனைக் கடலை நீந்தினோம் காண்.

—காரைக்கால் அம்மையார்.

அடியவராம் இமையவர்தம் கூட்ட முய்ய
அலைகடல் வாய் நஞ்சுண்ட அமுதே,
செங்கண்
நெடியானும் நான்முகனும் காணாக் கோல
நீலவிட அரவணிந்த நிமலா! வெந்து
பொடியான காமனுயிர் இரதி வேண்டப்
புரிந்தளித்த புண்ணியனே! பொங்கர்வாசக்
கடியாரும் மலர் சோலை மருங்கு சூழும்
கவின் மருகற் பெருமானே! காவாய்
என்றும்.

—பெரியபுராணம்.

உலகில் செல்வம் உடையவர் சிலர். வறியவர் பலர். இதற்கு என்ன காரணம்?

இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்
சிலர் பலர் நோலாதவர்.

—திருக்குறள்.

இறைவனை நினைத்து உணர்ந்து நோற்பார் மறுபிறப்பில் தனவந்தராக இனிது வாழ்வார்கள். அல்லாதவர் வறுமையில் வாடுவார்கள். ஆதலால் விரதத்தின் அவசியம் விளங்குகின்றது. சனிக்கிழமை தவிர மற்ற கிழமைகளில் வரும் பிரதோஷ தினத்தன்று பிரதோஷ வேளையாகிய மாலை 4 மணிமுதல் 6 மணிவரை சிவாலயத்தில் ஆலய வழிபாடு செய்தால் ஒரு வருடம் ஆலயம் சென்று இறை வழிபாடு செய்த பலனும் சனிப்பிரதோஷத்தன்று பிரதோஷ வேளையில் சிவாலயத்தில் இந்த புத்தகத்தில் உள்ளவாறு இறை வழிபாடு செய்தால் ஐந்து வருடம் தினம் தவறாமல் ஆலய வழிபாடு செய்த பலனும் கிடைக்கும். ஆதலால் எல்லோரும் பிரதோஷ விரதம் இருந்து பெரும்பேறு பெறுவார்களாக.

அன்பன்,
கிருபானந்தவாரியார்

# திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகளின் பொன்மொழிகள்

1 மாசிலா மனமே ஈசன் கோயில்.

2 ஒழுக்கம் உயிரினும் மேலானது.

3 இரை தேடுவதோடு இறையுந் தேடு.

4 முதுமைக்கு வேண்டின் இளமையில்தேடு

5 மறுமைக்கு வேண்டின் இம்மையில் தேடு

6 படிப்பாலும் பணத்தாலும் கடவுளைக் காணமுடியாது. பக்தியினால்தான் கடவுளை காண முடியும்.

7 பக்தியே முக்திக்கு வழி.

8 எல்லாவுயிரும் ஈசன் கோயில்.

9 அயர்ச்சியில்லாத முயற்சி உயர்ச்சி தரும்

10 பிறர் குற்றத்தை மன்னித்து விடுவது மனிதத் தன்மை; மறந்து விடுவது தெய்வத் தன்மை.

11 எந்த நேரம் இறைவனுடைய திருநாமம் நினைக்கப்பட்டதோ அது நம்முடைய நேரம். எது தருமத்தில் செலவழிந்ததோ அது நம்முடையது.

12 தனக்குள்ளே கடவுள் இருக்கத் தரணியெங்கும் கடவுளைத் தேடுகின்றார்கள்.

# திருமுழுக்காட்டின்போது சிவபுராணம்

நமச்சிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் தாள் வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள் வாழ்க
ஏகன் அநேக னிறைவ னடி வாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உள்மகிழும் கோன் கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்குஞ் சீரோன் கழல் வெல்க
ஈசன் அடிபோற்றி எந்தை அடிபோற்றி
தேசன் அடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமில னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்னனடி போற்றி
சீரார் பெருந்துறை நம் தேவனடி போற்றி
ஆராத இன்பம் அருளு மலைபோற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை

முந்தை வினை முழுதும் ஓயவுரைப் பன்யான்
கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட
வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய்
விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லையிலா தானே நின்
பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகி
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்அசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்ற இத்தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே
னெம்பெருமான்
மெய்யேயுன பொன்னடிகள் கண்டின்று
வீடுற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனவோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னாம்விமலா
பொய்யாயின வெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே

ஆக்கம் அளவிறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்
தருவாய்
போக்குவாய் யென்னைப் புகுவிப்பாய்
நின்றொழும்பின்
நாற்றத்தின் நேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற்போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோர் ஐந்துடையாய் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான்
வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டி
புறந்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ் சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே

மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே! சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில் வஞ்சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா வமுதே அளவிலாப் பெம்மானே
ஓரா தா ருள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீரா யுருக்கியென் னாருயிராய் நின்றானே
இன்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப்
பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை
பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார்
தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய
பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத
நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே
வந்தறிவாந்

தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான வுண்ணா ரமுதே யுடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் மையா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு
மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாரமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லல் பிறவி யறுப்பானே ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து
சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து.

## செம்பொன் அம்பலம் திருஅம்பலம்
## திருச்சிற்றம்பலம்

தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி
[illegible]கய்பத்துறை யெந்தாய் போற்றி

பாகம் பெண்ணுரு வானாய் போற்றி
குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளுந்தானும் உடனே காண்க.

திருச்சிற்றம்பலம்

## அடுக்கு விளக்கு காட்டும்பொழுது

சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள் வெண்ணீற்றாய்
பங்கயத் தயனுமா லறியா
நீதியே செல்வத், திருப் பெருந்துறையில்
நிறை மலர்க் குருந்தமே வியசீர்
ஆதியே யடியே னாதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே.

## ஐந்து விளக்கு காட்டும்பொழுது

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க் கிவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காணா மணிவிளக்கே

—திருமந்திரம்

## கற்பூரம் காட்டல்

கற்பனை கடந்த சோதி கருணையே உருவமாகி
அற்புதக் கோல நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பரவி யோமமாகுந் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ்செய்கின்ற பூங்குழல்.

போற்றி! போற்றி!!

—பெரியபுராணம்.

## திருமந்திரம்

சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே.

—திருமூலர்.

## கந்தர் அநுபூதி

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

—அருணகிரிநாதர்.

பேரா தரிக்கு மடியவர் தம் பிறப்பை
யொழித்துப் பெருவாழ்வும்
பேறுங் கொடுக்க வரும்பிள்ளைப்
பெருமானென்னும் பேராளா
சேரா நிருதர் குலகலகா சேவற் கொடியாய்
திருச்செந்தூர்த்
தேவா தேவா சிறைமீட்ட செல்வா என்றுன்
திருமுகத்தைப்
பாரா மகிழ்ந்து முலைத்தாயர் பரவிப் புகழ்ந்து
விருப்புடனைப்
பாவா வாவென் றுனைப் போற்றிப் பரிந்து
மகிழ்ந்து வரவழைத்தால்
வாரா திருக்க வழக்குண்டோ வடிவேல்
முருகா வருகவே
வளருங் களபக்குரும்பை முலைவள்ளி கணவா
வருகவே.

—திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ்.

## அம்பலவாணர் வழிபாடு

குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற்
குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில்
பால்வெண்ணீறும்

இலித்தம் உடைய எடுத்த பொற்பாதமும்
காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த
மாநிலத்தே.
—அப்பர்

**சிவாலய வழிபாட்டிற்குப் பின்**
**கொடிமரத்திற்கு முன்துதி**

வையம் நீடுக; மாமழை மன்னுக;
மெய்வி ரும்பிய அன்பர் விளங்குக;
சைவ நன்னெறி தாந்தழைத் தோங்குக
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே.
—சேக்கிழார்

# இந்து மதம்

## சிவ வழிபாடு

நமது நாட்டில் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னையது சைவம். சிவத்தை முழுமுதற் கடவுளாகக் கொண்டொழுகும் சைவம் தமிழ் மக்களின் உரிமைச் சமயம் என்பது தெளிந்த முடிவு.

சிவம் என்னும் சொல் பற்றி நிகழ்ந்த ஆராய்ச்சியில், வடமொழியில் தொன்மை வாய்ந்த சமய நூல்களான வேதங்களில் சிவம் என்னும் சொல் இல்லை என்பது விளங்கி விட்டது. வேதாந்த நூல்களான உபநிடதங் களில் சிவம் என்னும் சொல் வழக்கில் இல்லை.

உலகில் முழுமுதல் கடவுள் என்று கருதப் படுவது போன்று 'தென்னாடுடைய சிவனே' என நமது சான்றோர்கள் கூறுகின்றனர். இதனால் சிவநெறி தென்னாட்டவர்க்கே சிறப் பாக உரிய கடவுள் நெறியென்பது தெளிவாக தெரிகிறது.

பெரும் பாவமாகும்.

6. சண்டேசுவரர் மீது நூல் இடுவதும், சிவலிங்கத்திற்கும் நந்தி தேவருக்கும் இடையே போவதும் குற்றமாகும்.

7. கோயிலில் பிரசாதங்களை உண்டு தூண்களில் துடைப்பது கூடாது.

8. வழிபாடு முடிந்தபின் கொடிமரத்தின் அருகில் இருந்து வடதிசை நோக்கியமர்ந்து மூல மந்திரம் ஜெபிக்க வேண்டும்.

9. நன்கு இனிமையாக தோத்திரப் பாடல்களை அதிகம் சப்தம் போடாமல் இனிய குரலில் துதிக்க வேண்டும்.

10. கோயில் விளக்குகளில் எண்ணெய் இட்டு வழிபடுதல் புண்ணியம்.

---

## குறிப்பு

ஆலயம் தொழுவது சாலவும் நன்றும்
சைவத்திற்கு மேல் சமயமில்லை
சைவசித்தாந்த செந்நெறியே நன்னெறி
திருநீறும் உருத்ராட்சமும் திருவைந்
தெழுத்துமே முத்திக்கு சாதனங்கள்
குருலிங்க சங்கம வழிபாடே முக்திக்கு
வழியாகும்.

அடிசேர் முத்தியே சித்தாந்த முத்தியாம்
அடியார் பணியே ஆண்டவன் பணியாம்
பணிசெய்தல் நம் கடன், தாங்குதல் சிவன்
கடன்

வேணி முடித்த ஐயன் வேண்டும் வரங்கள்
தருவான்.

திருச்சிற்றம்பலம்



கோபுர தரிசனம் கோடி புண்ணியம்

